*Perundurai Sanatorium*

* 423 *Q.*—Sri N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) the amount of grant given to Perundurai Sanatorium by the Centre during 1957–58;

(*b*) the amount of funds collected for running the Sanatorium; and

(*c*) the expenditure incurred during that year?

The Hon. Sri M. A. MANICKAVELU : (*a*) Rs. 30,000.

(*b*) Rs. 2,35,688.

(*c*) Rs. 2,78,021.

Sri N. K. PALANISAMI : பெருந்துறை க்ஷயரோக ஆஸ்பத்திரி மாநிலத்திலேயே பெரிய ஆஸ்பத்திரியாக இருக்கிறது. அதற்குக் கொடுக்கபடும் மானியத் தொகை போதாது. எனவே மத்திய சர்க்காரும் மாநில சர்க்காரும் சேர்ந்து அந்தப் பற்றுக் குறையை சரிக்கட்ட முன் வருவார்களா ?

The Hon. Sri M. A. MANICKAVELU : இப்போது அதற்கு உதவி அளித்துக்கொண்டு தான் இருக்கிறோம். அதற்குள்ள "மெய்ன் டினன்ஸ் க்ராண்டை" அதிகப்படுத்தியிருக்கிறோம். அதற்கு மெய்ன் டினன்ஸ் க்ராண்டாக 46,000 ரூபாய் கொடுக்கிறோம், இதற்கு முன்பு இவ்வளவு தொகை கொடுத்ததில்லை.

*Hospital in Tanjore district*

*424 *Q.*—Sri A. VEDARATHNAM (on behalf Sri M. D. Thiagaraja Pillai) : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா.—

(அ) தஞ்சை ஜில்லா தாலூகா தலைநகரில் உள்ள எந்தெந்த ஆஸ்பத்திரிகளை சர்க்கார் எடுத்து நடத்தி வருகிறது ? அவைகளுக்கு ஆண்டு தோறும் ஆகும் செலவு என்ன ?

(ஆ) நன்னிலம் தாலூகா தலைநகரில் உள்ள லோகல் போர்டு ஆஸ்பத்திரியை எப்பொழுது சர்க்கார் எடுத்து நடத்த உத்தேசம் ?

The Hon. Sri M. A. MANICKAVELU : (*a*) The Local Fund Hospitals at Sirkali and Arantangi. The annual recurring expenditure on these institutions is about Rs. 54,950 and Rs. 9,000 respectively.

(*b*) The matter is under consideration of the Government.

Sri A. VEDARATHNAM : நன்னிலம் தாலூகா தலைநகர் ஆஸ்பத்திரியை சர்க்கார் எடுத்துக்கொள்வது பற்றிய ஆலோசனை எப்போது முடியும் ? அது எப்போது சர்க்காரால் எடுத்துக்கொள்ளப்படும் ? அதை விரைவில் எடுத்துக்கொள்ளும் உத்தேசம் சர்க்காருக்கு உண்டா ?

The Hon. Sri M. A. MANICKAVELU : தாலூகா தலைநகர ஆஸ்பத்திரிகள் மொத்தம் 28. அவைகளில் 24 சர்க்காரால் எடுத்துக் கொள்ளப்பட்டு விட்டன. பாக்கியுள்ள நான்கும் அனேகமாக இந்த வருஷம் சர்க்காரால் எடுத்துக்கொள்ளப்படலாம். அந்த நான்கில் ஒன்று தான் நன்னிலம் தாலூகா தலைநகர ஆஸ்பத்திரி.

Mr. SPEAKER : மணி பத்து ஆகப்போகிறது. இன்னும் 10 நிமிஷங்கள் எடுத்துக்கொண்டு எல்லாக் கேள்விகளையும் முடித்து விடலாம்.